
திருநெல்லை
ஆன்மீகத் திங்களிதழ்
மன்மத - தை - 2016 - ஜனவரி
No:43
13.01.2016 அ ... லூர் மடாலயத்தில்
நடைபெற்ற சமத்துவப் பொங்கல் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - தை - 2016 - ஜனவரி    இதழ் - 43

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| 1. | ஆசியுரை | 2 |
| 2. | சுபாநுவத் திருவாக்கு | 4 |
| 3. | கோயிலூர்ப் புராணம் | 11 |
| 4. | மடாலய நிகழ்வுகள் | 17 |
| 5. | சித்த ஞானம் | 19 |
| 6. | தமிழ்த்தூண் சாய்ந்தது | 23 |

தனி இதழ்  ரூ 10.00
ஆண்டுச் சந்தா  ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

தென்னவர் குலத்துத் தேவதை யான
திருமகள் எங்கள் திருக்குல விளக்கே
திருநறுங் கொன்றை சூடிய தேவன்
திருக்கரம் பற்றிய திகழ்மலை வல்லி

மன்னவர் தாள்பணி மரகத மயிலே
மாதவ யோகி ஆண்டவர்க் கருளி
மடமயில் ஆன குலமயில் நீயே
மதுநதி தந்த புதுப்புனல் ஆடிக்

கன்னலும் நெல்லும் கலந்தமை கழனி
காத்தவள் நீயே கவினமை வன்னிக்
கானகம் உறைவாய் கருணைகள் புரிவாய்
கற்பனைக் கெட்டா அற்புதம் ஆனாய்

பன்னலம் தருவாய் திரிபுவ னேசை
பார்த்தருள் வாயெனப் பக்தர்கள் கூடிப்
பாடினர் ஆடிப் பரவசம் உற்றார்
பரவினர் வாழப் பணிப்பதுன் பணியே !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

'ஆணவம்' யார் மனதிலும் எந்தச் சமயத்திலும், எந்த ரூபத்திலும் நுழையலாம். நுழைந்து ஆட்கொண்டு ஆக்கினைப் படுத்தலாம்.

செல்வக் கர்வம், தொழிற் கர்வம், புகழ்க் கர்வம், வெற்றிக் கர்வம், வித்யா கர்வம், அறக் கர்வம், பக்திக் கர்வம், தொண்டில் கர்வம் எனப் பலவகை. இதில் ஒன்றாவது இடம் பெறாத 'மனித மனம்' இல்லை என்றே கூறலாம்.

எல்லாக் கர்வங்களிலும் மிக மோசமானது வித்யா கர்வம். எனக்கு எல்லாம் தெரியும் என்கிற மனப்பாங்கு. இன்னும் மேலே நான் என்ன சொன்னாலும் பலிக்கும், நினைத்தாலும் பலிக்கும் என்கிற தனது சக்தியிலே உள்ள கர்வம். மனிதன் தன் வாக்கினாலோ, சக்தியினாலோ பிறருடைய எல்லாத்துயரங்களையும் மாற்றிவிட முடியும் என்று எண்ணுவது மிகப் பெரிய தவறு. என் ஆசீர்வாதத்தாலே அவன் துயர் நீங்கியது என்று கருதுவது பேதமை.

குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் 'நாம் ஆசீர்வதிப்போம். நம் குருமார்கள் நம் சிஷ்யன் சொல்லிவிட்டானே என்று நம் வாக்கைக் காப்பாற்றுவார்கள்' என்று சொல்வார்கள். நம் மனத்தூய்மையோடு பரம்பொருளை நம்பி ஆசீர்வதிக்கின்ற ஆசீர்வாதங்களுக்குப் பயன் உண்டு. நம் சாபத்தால் ஒருவருக்குத் தீங்கு வந்தது என்று எண்ணுவதும் பேதமை. நல்ல மனம் உடைய பெரியவர்கள் நெஞ்சிலே சாபம் கொடுக்க வேண்டும் என்ற எண்ணமோ, நான் கொடுத்தால் பலிக்கும் என்ற எண்ணமோ தோன்றாது.

ஒரு நல்ல ஆசிரியர் எப்படித் தன்னைக் கேலி செய்யும்

மாணவர்களும் நல்லவர்களாக மாற வேண்டும், நன்கு வளர்ச்சி பெற வேண்டும் என்று எண்ணுவாரோ அதைப் போல எல்லோரும் எண்ண வேண்டும், ஆசைப்பட வேண்டும்.

நம் ஐந்தாம் பட்டம் வீரப்ப சுவாமிகள் மேன்மையான ஆத்மா. காஞ்சிப் பெரியவராலேயே 'ஞானி' என்று போற்றப்பட்டவர்கள். அவர்களுக்கு வாக்குப் பலிதம் உண்டு. நல்லது சொன்னாலும் நடக்கும்; அல்லது சொன்னாலும் அப்படியே நடக்கும். ஒரு கால கட்டத்தில் "தன் மனம் சினம் வயப்படுகிறது. அதனுடைய தாக்கம் அடுத்தவர்க்குக் கேடு விளைவிக்கிறது" என்ற எண்ணம் வந்தது. உடனேயே தன் கோபத்தைக் குறைத்துக் கொள்வதற்காகவே 'திருக்களர் பாரிஜாதவனேஸ்வரர்' திருக்கோவிலில் தவம் செய்து கோபத்தைத் துறந்தார்கள்.

அவர்களைப் போல் நம் மனதைத் தூய்மைப் படுத்திக்கொள்வோம். என்னாலே ஆக்கவும் முடியும், அழிக்கவும் முடியும் என்ற அகம்பாவம் தவிர்த்துச் சாந்தம் அடைவோம். ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் பரம்பொருளாலே மட்டும் முடியும். எனவே அகந்தை தவிர்ப்போம். மனத்தூய்மை பெறுவோம். சாந்தம் அடைவோம். ஆசீர்வாதங்கள் !

ஸ்ரீ சற்குருநாதன் துணை.

## கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

**அறிதகுதி (அதிகாரித்வம்) :**

**முற்குறிப்பு :**

'பிரம்ம ஞானம்' மட்டுமே உண்மையான அறிவு என அத்வைதம் ஏற்கிறது. இதனைப் பெறுதற்கு, தொடக்க நிலையில் 'பரோட்ச ஞானமும்', முதிர்வு நிலையில், 'அபரோட்ச ஞானமும்' வேண்டும். தொடக்கத்தில், தத்துவம் கற்றல் மூலமாக பரோட்ச ஞானம் கிட்டும். இது, அறிதல் எனப்படும் 'நூலறிவு' மட்டுமேயாகும். இத்தகைய அறிவினைப் பெறுதற்கென, அறிதகுதிகள் உண்டு. அவை, 'நான்கு சாதனங்கள்' எனும் பொருளில் கூறப்படும் சாதன சதுட்டயமாகும். இவை ; 1. விவேகம், 2. வைராக்யம், 3. 'சமம்' தொடங்கிய ஆறு செல்வங்கள், மற்றும், 4. வீடுபேற்றில் விருப்புடைமை (முமூட்சுத்வம்) ஆகும். இவற்றுள், மேற்கூறிய ஆறு செல்வங்களுக்கான உட்பிரிவும் உண்டு. அவை: 1. பொருள் குற்றம் அறிந்த, நடுநிலை மனம் உடைமை (சமம்), 2. பொருள்களை நாடாத, புலன் அடக்கம் (தமம்), 3. செயல்பற்று இல்லாத மனத்தை, குறிக்கோளில் மட்டுமாக நிறுத்துதல் (உ பரமம்/ உ பரதி), 4. இன்னல்களைப் பொறுத்துக்கொள்ளும் சகிப்புடைமை (திதீட்சை), 5. வேதாந்த சாத்திரமும் குருவின் உபதேசமும் 'சத்யம்' எனும் நம்பிக்கை (சிரத்தை), மற்றும், 6. சாத்திர இணக்கத்தால், அலைவற்ற மனத்தை பிரம்மத்தில் நிறுத்துதல் (சமாதானம்), என்பனவாகும்.

சாதன சதுட்டயமுடையவர், குருவின் மூலமாகக் கற்று, தத்துவ சாத்திரத்தைப் புரிந்து கொள்வார். பின்னர், அதே சாத்திரத்தில் நிலைத்திருந்து தெளிவு பெறுவார். அதன் பின்னரே, அனுபவ நிலை - உணர்வு நிலை - முதிர்வு நிலை - எனவெல்லாம் போற்றப்படும் அபரோட்ச ஞானம் பெறுவார்.

சாதன சதுட்டயங்களில் அடங்கிய, விவேக வைராக்கியம், மன

அடக்கம், புலனடக்கம் மற்றும் விடுதல் ஆகியன உலகியலிலும் தேவை என்பதால் சென்ற இதழ்களில் கண்டோம். எஞ்சியவை பற்றி இந்த இதழில் காண்போம்.)

I பொறுத்தல் (திதீட்சை):

குறைபாடுகளையுடையவர்களையும் கூட இறைவன் பொறுத்து ஏற்கிறார். அதுபோலவே, நாமும், நம்மை எதிர்கொள்ளும் இன்னல்களைப் பொறுத்தல் வேண்டும்.

திருவாக்கு :

1. "நல்லசிசு, பொல்லாத சேய் என்று தாயும் இரு
நாட்டம் தவிர்ந்து அருள்வபோல்
நாடும் உலகு உயிரைநீ சமமாய் அளித்தலால்
நன்மையுறும் அன்னை எனலாம்....." (88 / 136)

2. "பிள்ளைகள் நூறு பிழைகள் செய்தாலும்
பெற்றவர் தனையரை முனிந்து
தள்ளுதல் உலகில் உண்டுகொல்? அடியேன்
தவற்றினைப் பொறுத்தருள் புரிவாய்...." (68 / 104)

3. ".... பொற்புமிகும் உனதுபத்தி ரசம்புசிக்கும்
புன்மையனுக்கு எது நன்மை தீமையாகும்?
மற்புயனே அவ்வெறியிற் பிதற்றும் பாடல்
வகையேது தொகையேது? வழியேதாகும்
சொற்பிழைகள் வந்தாலும் பொறுப்பது உந்தன்
சுதந்தரமே சுதன் வசனம் தந்தைபோல." (77 / 122)

4. "கணடதே திரமாக் கவர்ந்திடும் கருத்தைக்
கழல்இணை நிழலிலே இருத்திக்
கொண்டிட எனக்கு ஓர் திரம் இலை ; கவராது
இருக்கவும் அருளது கொடுப்பாய்...." (12 / 12)

**உபதேசத் திருவாக்கியங்கள் :**

1. "பிறர்குற்றத்தைத் தனதாக எண்ணிக் கொண்டு, தன்குற்றத்தை விசாரிக்க வேண்டும்." (151/46)

2. "சிற்றறிவாகிய சீவ அறிவே எல்லாவற்றிற்கும் மூலம்." (151/47)

3. "பிரபஞ்சத்தில் தோன்றும் பேதங்கள் எல்லாம் சிற்றறிவிலேதான் என்று அறிய வேண்டும்." (147/31)

**கருத்துரை :**

எனது அறிவு பல்வகை வேறுபாடுகளைக் காண்கிறது. ஆனால், வேறுபடுத்துதல் சிற்றறிவு எனப்படும். சிறுவனாகிய நான் பல பிழைகளைப் புரிகிறேன். இருப்பினும் பெருங் கருணையுடைய இறைவன் / குரு என்னைப் பொறுத்தருளுகிறார். இன்னல்களும் குறைகளும் பொறுக்க வேண்டியனவே.

**II நம்பிக்கை (சிரத்தை): திருவாக்கு :**

1. **"சுட்டும் இடத்து உண்டெனலாய்ச் சுட்டுஅற்றால் இல்லாத**
**துட்டமனச் சஞ்சலத்தில் தோயாமல் - எட்ட அரிதாய்**
**எவ்வுருவும் எங்கும் இரும் பொருளாய் நின்றதுஎதோ**
**அவ்வறிவே தெய்வம்என லாம்."** (94/145)

2. **"உண்டே உறங்குவது உண்மையாய் நம்பினேன் ராமராம - நின்**
**உண்மை அறிய ஒழிந்துஅவை நீங்கின ராமராம**
**பண்டேஇருந்த பயங்கள் ஒழிந்தன ராமராம - நின்**
**பாதமலரில் பணிந்த திடத்தினால் ராமராம."** (61/92)

3. **"ஐம் பொறியும் ஐம்புலனும் ஆறி அடங்குமிடம்**
**நம்பிநம்பி நீஅடையும் நாள்என்றோ நெஞ்சகமே."** (113 / 14)

**உபதேசத் திருவாக்கியங்கள் :**

1. "துரியநிலையிலும் எல்லாம் சின்மயம் என்கிற
நிலையிலும் புத்தி அழுத்தம் வேண்டும்." (156 / 68)

2. ஈதனைத்தும் சொரூபமே. எதை இச்சிப்பேன், இங்கு எதை இகழ்வேன் எனல் பற்றின்மை. இதில் யாருக்கும் நம்பிக்கை வரவேண்டுவதுதான். (147/33)

3. குருவாக்கியத்தில் சந்தேக விபரீதம் இன்றிஇருக்கிறது மெய்ப் புருடார்த்தம். (153/53)

கருத்துரை :

தெய்வம் உண்டு அல்லது இல்லை என்பது போன்ற முரண்பாடான கருத்துக்களை நாம் நம்புகிறோம். உணவு உறக்கம் போன்ற வாழ்வியல்வுகளையும் நம்புகிறோம். இத்தகைய நம்பிக்கைகள் நம் பொறி, புலன்களுக்கு ஆட்பட்டவை. இவற்றை மாற்றி, படைத்தவன் காக்க மாட்டானா எனும் நம்பிக்கை பெறவேண்டும். குருவாக்கியம் மற்றும் சாத்திரத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டும். உள்ளதெல்லாம் ஒன்றே என நம்புபவருக்கு பயங்களோ முரண்பாடுகளோ எதிலிருந்து வருதல் கூடும்?

III இணக்கம் (சமாதானம் ) : திருவாக்கு :

1. "நன்றுகளும் தீதுகளும் நமது இடத்தில் இல்லை
நமது இடத்தில் உண்டான நினைவதனால் உண்டு
நன்றுகளும் தீதுகளும் நினைவுஇறந்தால் இல்லை
நமதுமயம் வெறும்பாழாம் நாடி அது ஆவாய்
நன்றுகளும் தீதுகளும் நினைவுமயம் ஆகும்
நமதுமயம் நினைவாகும் நாடி உணருங்கால்
நன்றுகளும் தீதுகளும் இன்றி நிறைகின்ற
நமதுமயம் எல்லாமா நாடி அது ஆவாய்." (95/147)

2. "பொல்லாத இக்காயம் புல்லும்மதி வாசனைகள்
எல்லாம் இறந்தளன என்று இருப்பாய் நெஞ்சகமே." (126/69)

3. "அறிவே திருஉருவாம் அம்மை சரணாப்
பிறியாது நின்றார் பெரியோர் - குறியாது
நின்றாய் என்நெஞ்சே நெடுநாள் யான் எனதென்று
நன்றோ? சிவைவடிவை நாடு." (31/54)

**உபதேசத்திருவாக்கியங்கள் :**

1. "தன்னை கர்மகர்த்தாவாகக் காணும்போது, கர்த்துருதந்திரம் என்றும், நித்தியமாய், பூரணமாய்க் காணும்போது, வஸ்து தந்திரம் என்றும் அறிக." (159/77)

2. "பூமியில் உண்டான வஸ்துக்களை கற்பிதம் என்றும், தன்மயம் என்றும் சொல்லலாம். இது போல, சிதாகாசத்திற்கு மேலில்லாதபடியினாலே, அதில் உண்டானவைகளைக் கற்பிதம் என்றும் தன்மயம் என்றும் சொல்லலாம்" (149/38)

3. "பேரறிவிலே சம சாட்சிதான்." (146/29)

4. பரிபூரணம் ஆகிய தனக்கு என்ன வேண்டுவது? (138/5)

**கருத்துரை :**

ஒரே செயல்பாட்டின் காரணமென, நான் (எனது உடலால்) செய்தேன் என்பதாகவோ, செயல்காரணம் பிரம்மமே என்பதாகவோ வேறுபடுத்திக் கூறுகிறோம். இதுபோன்றே பற்பல வேறுபாடுகளைச் சாத்திரமும் ஏற்கிறது.

ஒருமை பேசும் அத்வைத தத்துவம் வேறுபாடு காட்டலாமா எனும் ஐயத்திற்கான சாத்திர இணக்கம் வருமாறு :

1. உலகியல் வியவகாரிகமாகக் கூறப்படும் உடல், மனம், மதி, புலன், பொறி, வாசனை, ஆசைகள் எனும் வேறுபாடுகளெல்லாம் சிற்றறிவின்பாற்பட்டன.

2. பேரறிவு நிலையில் (சிற்றறிவு நீங்கினால்) அனைத்தும் சமமாகிவிடும் என்பது பரமார்த்திக நிலை ஆகும். இவற்றுள் பரமார்த்திகமே வஸ்து தந்திரம் எனப்படும் உண்மை நிலை.

3. வேறுபாடுகள் என்னால் அல்ல எனவும்.

4. நிறைவாக உள்ள ஒன்றினை, மேற்கொண்டு நிரப்ப வேண்டியதில்லையே எனவும் புரிந்து கொள்ள வேண்டும்.

திருநெல்லை அம்மையைச் சரணடைந்த பெரியோர் இவ்வாறு சமாதானம் அடைந்துள்ளனர்.

IV வீடுபேற்றில் விருப்பம் (முமூம்சுத்வம்) : திருவாக்கு :

1. "எண்ணிப் பலபொருளை ஈட்டினோன் ஆனாலும்
மண்ணில் பெரியோனாய் வாழ்ந்தாலும் - விண் அதிலே
மூடாவிழி உடையோர் ஆனாலும் முத்தியினைக்
கூடார்க்கு ஆளாக்குறி." (99/155)

2. "...அன்னம் அளிப்பாய் அதுஇன்றேல், சூழ்காடி
என்னத்தால் பேதம் எனக்கு." (24/35)

3. ".... அல்லுபகல் நாட்டமாகி அலைகின்ற வீணன் உனை
என்றைக்கு அடைந்து நிலை அதுவாவது எந்தநாளோ?" (47/74)

4. "..... ..... .. பவ்வம்அற
உன்னாது, உரையாதே, உள்ளம் அழிந்து உன்உருவாய்ப்
பின்னம்அற நிற்பது என்றோ பேசு." (26/43)

5. "..... .... ... சாரும் இடம்
இன்னதுஎனச் சுட்டறிவோடு எய்தில்அரிது ஆம்துரியம்
தன்னில்யான் சேர்வதுஎன்றோ சாற்று." (27/46)

உபதேசத் திருவாக்கியங்கள் :

1. "தன்னைச் சீவபாவனையாய்க் காண்கிறதே பிறவி; தன்னைச் சிவரூபமாய்க் காண்கிறதே மோட்சம்." (145/24)

2. "நாம, ரூபம் - நாடாமல், பகிர்முகமின்றி இருக்க வேண்டும்." (137/4)

3. "தத்துவ - அதத்துவ விசாரம் பண்ணி, அதத்துவத்தைத் தள்ளி, தத்துவத்தை நான் ஆகக் கண்டு, சந்தேக, விபரீதம் அற இருக்க வேண்டும்." (152/50)

4. "இத்தனையும் மாயாமயம் அலவோ? உள்ளபடி முடியும்" (142/18)

**கருத்துரை :**

பெரியோரென நம்மால் போற்றப்படுபவரும் கூட, வீடுபேற்றில் விருப்பமின்றியவராயின், அவர் பெருமைக்கு உரியவரல்ல. வீடுபேறு என்பது நாம் செல்லவேண்டிய இடம். ஆயினும், அதனைச் சுட்டிக் காட்டுதலோ, வரையறை கூறுதலோ அரிதாகும். இருப்பினும், அதனை விரும்புதல் வேண்டும், இதுவரை விரும்பாது, வாழ்நாளை வீணாக்கிவிட்டேனே, இனியேனும் அதுகிட்டுமா, எனும் ஏக்கமும் வேண்டும். இவ்விருப்பத்தைச் செயல்படுத்துதற்கு, ஐயம் திரிபுஅற விசாரணை செய்து, நாமரூபம் எனும் வேறுபாடுகளை நீக்கி, இத்தகைய நினைவுகளற்ற உள்ளத்தோடு மௌனமாயிருக்க வேண்டும். இதுவே பகிர்முகமுடைமை ஆகும். இத்தகையவரே பெரியோர். இவர் தன்னைச் சிவமாகவே காண்பார். இதுவே வீடுபேறு (மோட்சம்) என்பதும், மற்றும் நம் உண்மையான நிலையும் ஆகும்.

**பிற்குறிப்பு :**

அதிகாரி எனும் சொல், இங்கு, பொருப்பாளர் எனும் பொருளில் பயன்படுத்தப்படவில்லை ; தகுதியுடையவர் என மட்டுமே கூறப்படுகிறது.

ஞானம் கற்பதற்கான அறிதகுதியாக, சாதன சதுட்டயம் மட்டுமே கூறப்பட்டுள்ளது; மொழி, வர்ணம், ஆசிரமம், போன்ற வேறுபாடுகள் போற்றப்படவில்லை. (வேறுபாடுகளைப் போற்றுவது அத்வைத ஒருமைப்பாட்டிற்கு முரணாகும்.

பல்வேறு தத்துவங்களும் போதிக்கப்பட்ட முற்காலத்தே, குறிப்பிட்ட ஓர் தத்துவத்தில் ஈடுபாடும், சாதன சதுட்டயமும் உடைய மாணவர், தானே விரும்பி, குருவை நாடினார்; நாடிய மாணவரது சாதன சதுட்டயம் சோதிக்கப்பட்டதும் உண்டு. இதன் பின்னரே அம் மாணவருக்கு குருசிரவணம் கிட்டிற்று. இத்தகையவர், குறிப்பிட்ட தத்துவ அதிகாரி எனப்பட்டார். சாதன சதுட்டயமுடைய ஒருவர், தமே விரும்பி, குருவை நாடுவது பற்றி இனிக் காண்போம்.) தொடரும்

*(தொடரும்...)*

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

## (சுதன்மை அருள்பெறு படலம்)

அருள்வளர் சாலி வாடி எனும்பதி அதனுள் வாழ்வார்
இருள்வளர் கண்டத்(து) எண்தோள் இறையவற்(கு) அன்பு பூண்டு
மருள்வளர் புந்தி நீத்த வணிகர்தம் குலத்து வந்தான்
தெருள்வளர் தூய சிந்தைச் சிவகுத்தன் என்னும் பேரான் 1

மாதனம் ஆவ(து) எல்லாம் மறைமுழு(து) இயம்பு நீற்றுச்
சாதனம் என்று கொண்டோன் தலைகளம் கரம்ஆர் பாதி
ஓதன உறுப்(பு)எ லாம்கண் மணிபுனைந்(து) உவக்கும் நீரான்
ஏதநம் பால்ஏ(து) என்னா எழுத்(து)ஐந்தும் என்றும் உள்வான் 2

மாற்றரு நடவை தோறும் வளம்பயில் தண்ணீர்ப் பந்தர்
போற்(று)உறு நிழல்செய்(து) ஆரம் பூந்தடம் ஆதி செய்வான்
தோற்றிடு குணத்தின் மிக்கான் தூயநிட் காமம் ஆக
ஏற்றவர் தமக்(கு)ஏ தேனும் இல்லைஎன் னாமல் ஈவான் 3

மேன்மையில் சிறந்த(து) ஆய வாணிகம் விழைந்தா னேனும்
ஊனம்இன்(று) ஒளிரா நிற்கும் உழுதொழில் வாழ்வும் உள்ளான்
ஆனமற்(று) அனையான் பன்னி சுதன்மைஎன்(று) அறையும் பேராள்
ஈனம்இல் கற்பில் சாலி எனப்படும் ஒழுக்கின் மிக்காள் 4

செந்திரு மகளே என்னத் திருந்துபேர் அழகின் மிக்காள்
அந்தின்மண் மகளே என்ன அறைதரு பொறையில் கூர்த்தாள்
முந்தும்இல் அறத்திற்(கு) ஆய முழுமையும் காலத்(து) ஈட்டி
வந்தவர் பசித்தீ மாற மடைசமைத்(து) உதவு நீராள் 5

பரிபுரம் புலம்பப் பூண்டு பத்தர்தம் உளத்து வைகும்
திரிபுவ னேசைபொன்தாள் சிந்திக்கும் செல்வம் மிக்காள்
உரியதாய் யா(து)ஒன் றேனும் உண்ப(து)உற் றிடுபோ(து) எல்லாம்
பிரியமீக் கூர வந்(து)அப் பிராட்டியை ஊட்டி உண்பாள் 6

நிறைமதுப் பொய்கை மூழ்கி நிரம்பவெண் நீறு பூசிப்
பிறைமுடிப் பெருமான் பாகப் பிராட்டியார் திருமுன் சென்று
குறைஅறக் காத்தி என்று கும்பிட்டுச் சூழ்ந்து போற்றி
உறையுளில் செல்வாள் காலம் தொறும்விடா உறுதி பூண்டே 7

கற்பினில் சிறந்த இந்தக் காமரு வல்லி யோடும்
அற்புதம் பொலியவாழ்நாள் அம்மைதன் அருளி னாலே
பொன்பொரு வடிவம் கொண்ட தால்என்று புவனம் சொல்லப்
பற்பலர் களுங்கொண் டாடப் பாவைஒன்(று) உதித்த(து) அன்றே 8

பரவுபெண் மகவை ஈன்று மணிஎன ஒளிர்தல் பாரா
அரதன வல்லி என்(று)ஓர் நாமமும் அமையச் சாத்தி
விரவுபொன் குதம்பை கட்டி வில்லிடு பட்டம் ஆதி
உரவுசெய் மணிப்பூண் சாத்தி ஒளிபெற வளர்த்தார் அன்றே 9

பேதைஅம் பருவம் தீர்ந்து பெதும்பைஅம் பிராயம் நண்ணிக்
கோதையில் கோதைசூடல் குளிர்பொழில் இடைசென்(று) ஆடல்
ஓதையில் பொலிநீர் ஆடல் உவந்துபொன் ஊசல் ஆடல்
காதையில் கண்ணி நல்லாள் இவைஎலாம் களிப்பச் செய்வாள் 10

அரதன வல்லி இவ்வா(று) ஆடலின் நிகழா நிற்கக்
கர(வு)அறு சிந்தை வாய்ந்த சிவகுத்தன் கழனி தம்முள்
வரம்மலி உமையாள் நேர்ஓர் வளம்புனற் கழனி ஒன்று
விரவது நாற்பு ரத்தும் வேலிஇன்றி இருப்ப(து) அம்மா 11

அம்மைசந் நிதிமுன் ஆக அமைந்தஅக் கழனி தன்னைச்
செம்மையின் உழுதல் செய்து செழுந்தழை ஆதிஇட்டுக்
கொம்எனக் குழைசே(று) ஆக்கிக் கொழுவிய செந்நெல் வித்த
அம்மநன்(கு) உறமு ளைத்தூ(று)அகன்றிட வளர்ந்த மாதோ 12

நெறிதரு களைகள் கட்டுத் தீம்புனல் அமையப் பாய்த்தி
அறிதரு காப்பும் இட்டுப் பாதுகாத்(து) அமரும் நாளில்
குறிதரு காவல் மாந்தர் ஒருதினம் கூடா(து) ஓர்ந்து
பறிதரு நிறம்சால் மேனிப் பாவையைக் காஎன்(று) ஏவ 13

அரதன வல்லி என்பாள் ஆடும்ஆ யத்தோ(டு) எய்தி
விரவிஅப் பணைகா வாமல் விரும்பிய விளையாட் டாலே
புரிமதுப் பொய்கை பாங்கர்ப் பொலிஇளஞ் சோலைமேவிப்
பரிபுரம் சிலம்பி ஆர்ப்பப் பன்மலர் குற்(று)அ மர்ந்தாள் 14

காவல்இன் மையினால் பைங்கூழ் கழனியில் அழியும்என்று
மூவில்(கு) ஈன்ற செல்வி முப்புவ னேசைஎன்பாள்
மேவரும் சுதன்மை அன்பு விசேடத்தால் கருணை கூர்ந்(து)ஆங்(கு)
ஓவரும் தானேகாவல் நேருவான் உள்ளம் கொண்டாள் 15

பரவுநீ(று) அணிந்த நெற்றி பதிந்தகத் தூரிப் பொட்டும்
விரவுகுங் குமத்தின் பூச்சால் மிளிர்கபோ லமும்மான் நோக்கும்
வரம்மிகு மற்றும் உள்ள மாண்(பு)அலங் காரத் தோடும்
அரதன வல்லி போலஅலங்கும்ஓர் உருவம் கொண்டாள் 16

அனிந்திதை அழகு வாய்ந்த கமலினி ஆதி ஆனோர்
கனிந்(து)உற(வு) ஆகி மாதர் உருக்கொடு கவின்று சூழப்
புனைந்தபொற் சிலம்பு தண்டை மேகலைபொங்கி ஆர்ப்ப
நினைந்தஅக் கோயில் நின்றும் வெளிக்கொண்டாள் நிமலை மாதோ 17

திரிபுவ னேசர் முன்பு சென்றுதான் போதல் கூறிப்
பரிதரும் விடையும் பெற்றுப் பனிந்துபின் தொடராநிற்கும்
புரிதரு தளிஉள் ளாரைநிற்குமா புகன்று வானம்
உரிஞுகோ புரம்முன் உற்றாள் உல(கு)எலாம் ஈன்ற அம்மை 18

வளமதுப் பொய்கைப் பாங்கர் வடகரை நடவை கூடி
உளம்நெகிழ்ந்(து) அவனி நங்கை உஞற்றிய தவப்பே(று) எய்தப்
பளகறு செம்பொன் பாதம் பயப்பயப் பெயர்த்து வைத்துத்
தளர்இடை ஒசியச் சென்று தண்புனல் கழனி சார்ந்தாள் 19

வருசிவ குத்தன் பண்ணை வரம்புகால் திசையும் சூழ்ந்தே
அரு(கு)ஒரு கழனி மேயஅவிர்கழைத் தோகை நீழல்
உ(ரு)அமை ஆயத் தாரும் மறைகளும் முடங்கு சூழ
மருவிஓர் கழனி காத்தாள் வையகம் முழுதும் காப்பாள் 20

சீர்அறி(வு)உடைய சான்றோர் சிவகுத்தன் சுதன்மை என்பார்
பேர்அறி வொடுமுன் செய்த பெருந்தவம் யாதோஎன்னக்
கார்அறி(வு) ஒழிந்தார் உள்ளம் கடுக்கும்ஓர் வரப்பின் வைகி
ஓர்அறி(வு) உயிர்காத் தாளைஅறி(வு)உயிர் ஒருங்கு காப்பாள் 21

அருமறை என்கோ அந்த வருமறை அந்தம் என்கோ
கருமலம் துமித்த மேலோர் கவின்நிறை உள்ளம் என்கோ
நிருமலன் இடப்பால் என்கோ நிருமலி உறையப் பெற்ற
திருவளர் அன்பு வாய்ந்த சிவகுத்தன் கழனிக் கோட்டை 22

பரவுமுக் கோணம் நன்கு பயில்அறு கோணம் மற்றை
உரவுசெய் கோணம் எல்லாம் ஒருங்(கு)உருக் கொண்ட(து) ஏய்க்கும்
அர(வு)அணி சடையான் பாகத்(து) அகல்உறா(து) அமர்வாள் வைகும்
திரம்உறு பத்தி சான்ற சிவகுத்தன் கழனிக் கோடு 23

அருள்பொழி தெய்வப் பீடம் அறுபத்து நான்கே மண்ணில்
தெருள்உறச் சிறந்த என்பார் சிவகுத்தன் கழனிக் கோடும்
பொருள்மிகும் அவற்றோ(டு) ஒன்றாப் புணர்த்திஓர் அறுபத்தைந்(து) என்(று)
இருள்தப உரையார் என்னே எண்இல்பல் கலையும் வல்லார் 24

சிலைஎனப் பரிக்கும் தேவி திருந்துதன் நீழல் மேவி
மலை(வு)அற இருத்த லாலேமகிழ்ச்சி மீக்கொண்டு செய்யுள்
நிலையுடைக் கரும்பு மேலாநில(வு)உற வளைந்து தோகை
உலை(வு)அரு நீழல் செய்யும் ஒருவனம் போலமாதோ 25

மருவிய பண்ணை காத்து வரம்பின்மேல் இருக்கும் நங்கை
பொருவரும் கரும்(பு)ஒன்(று) அம்ம இடக்கையால் பொருந்தப் பற்றும்
தி(ரு)அமர் காட்சி நாம்வே(று) உருக்கொடு செறுக்காத் தாலும்
உ(ரு)அமர் சிலைவி டேம்என்(று) உவ ந்துகைக் கோடல் போலும்26

செய்யதா மரைப்பூ ஒன்று திகழ்தர வனப்பால் பூத்து
வையம்முற்(று) அவாவத் தோன்றும் காட்சிதான் இடக்கை வாய்ந்த
வெய்யதீஞ் சுவைஅ ளாய வில்லிடைப் பொருந்து மாறு
கொய்யவாய்ந்(து) அருகு சார்ந்து குலவுதல் போலு மாலோ 27

அன்றியும் மறைஈ(று) எல்லாம் அளப்பரும் துயரத்(து) ஆழ
ஒன்றிய வரப்பின் மேனி உறுவது தகுதி ஆம்கொல்
என்றுபண்(டு) இசையால் கூறித் தாங்குதற்(கு) இசைந்தாற் போலும்
துன்றுபல் மலரின் உள்ளும் உயர்ந்தஅத் தோலாப் பூவே 28

விளைபயிர் காக்க வந்தாள் விடாஇலக் கணையி னாலே
வளைகருங் கோட்டு மேதிவண்ப(சு) அன்றி நாம்இங்(கு)
உளைதர மிதிப்போ மேனும் சினந்(து)உடன் களையும் என்று
தளைஉறற்(கு) அஞ்சிஎன்ன அகன்றன ததைவீ எல்லாம் 29

உறுபயிர் காக்க வந்தாள் உபஇலக் கணத்தி னாலே
செறுவக நமையும் காப்பாள் தேற்றம்என்(று) உரைத்தல் போல
மறுவறு கமட நண்டு மண்டுகம் முதலி யாவும்
பெறுதுயர் ஒழிந்து வாவிப் பிறங்குவ புனலின் அம்மா 30

உரு(வு)உவ மத்தால் மற்றை மாதர்கட்(கு) உரைத்தல் போலோ
மரு(வு)உரு வத்தால் அன்றிப் பார்வையால் மாதர்செய்யும்
ஒரு(வு)அறு தொழிலினானும் ஒத்தன நின்கண் என்று
பெருகஅக் கழனி மாடு துள்ளுவ பிறழ்சேல் எல்லாம் 31

விளங்குதன் உருவம் மாறி வேற்(று)உருக் கொண்டு மாறும்
களங்கம்இல் உமையாள் செய்ய திருமுகம் கஞ்சம் என்று
வளம்குலாம் அளிகள் அண்மை வந்துசண் பகப்பூ வாசம்
உளம்கவல் இயற்ற ஓடும் பிரான்விடு தூதை ஒத்தே 32

பைந்தோகை மயிலால் பெற்ற பைந்தோகை கழைக்க ரும்பின்
பைந்தோகை நீழல் வைகும் பண்பினுக்(கு) ஏற்பச் செந்நெல்
பைந்தோகை கொய்து காதில் சூடினாள் பாங்கி மாராம்
பைந்தோகை மார்நஞ்(சு) ஊட்டுப் பாறிய(து) என்(று)உள் ஊட 33

தேவிஓர் உருவம் கொண்டு செழும்புனல் பழனம் காத்தல்
மேவிய முல்லை முன்னோன் விரும்புதண் குறிஞ்சி மைந்தன்
பாவிய விருப்பிற் காக்கும் பண்பினால் பழனம் காக்கத்
தாவரும் தானேவந்த தன்மையை நிகர்க்கும் மாலோ 34

இன்னணம் காவல் ஆற்றி இறைவிஅங்(கு) இருக்கும் ஏல்வை
பொன் விர் சுதன்மை என்பாள் புத்திரி பசிஆற் றாளாய்
என்னவெந் துயர்உற் றாள்கொல் என்றுவல் விரைந்(து)இல் அட்ட
துன்னும்இன் சுவைய தாய சோறுகொண்(டு) அணையல் உற்றாள்
35

முளிதயிர் கலந்த முல்லை முகைநிகர் புழுங்கல் அன்னம்
களிதரு கடுகு பச்சைக் கரியவேப் பிலைமெல் இஞ்சி
அளியகுய்ப் புகைஅ ளாவி அமைத்(து)ஓர்பொற் கலத்தின் ஏந்திப்
புளிவிர(வு) இஞ்சி ஆதி பொருந்துபல் ஊறு காயும் 36

எவரும்வாய் ஊறி வாஞ்சித் திடஅமை நறுநீர் மோரும்
துவர்படு காயும் தூய வெள்இலைச் சுருளும் மற்றைக்
கவல்அரும் ஏலம் சாதிக் காய்முதல் பலவும் கொண்டு
புவனம்முற்(று) உயிர்த்தாள் வைகும் புனற்செழுங் கழனி சார்ந்தாள்
37

இத்துணைப் பொழுது தாழ்த்த(து) என்னையான் பசியால் நொந்தேன்
மைத்தபூங் கூந்தல் அன்னாய் என்றுமன் உயிர்கட்(கு) எல்லாம்
மெத்துதாய் ஆன கள்வி கேட்டலும் வேலை யாலே
புத்(து)அமு(து) அனையாய் சற்றே பொழுதுபா ணித்த(து) அன்றே38

ஆயினும் விரைந்து வந்தேன் நின்பசி அவியு மாறு
மேயயான் கொண்டு வந்த விரும்(பு)அமு(து) உண்பாய் என்று
பாயபேர் அன்பு பொங்கப் பரிந்துபல் முகமன் சொற்றாள்
தூயதன் மனத்துச் சற்றும் களங்கம்இல் சுதன்மை அம்மா 39

தாமரை இலைப றித்து மரகதக் கலம்தான் என்னக்
காமரு வரப்பில் இட்டுக் கமழ்சுவைப் பதம்ப டைத்து
மாம(ரு) ஊறு காயின் வருக்கமும் படைத்தாள் அன்னாள்
தேமரு அன்பினோடும் தி(ரு)அமுது உண்ணப் புக்காள் 40

இதுசுவை உடைய(து) அன்னாய் இதுதொடு கையும்ம மணக்கும்
இதுபதத்(து) அமைந்(து)இ ருந்த(து) இதுதினத் தெவிட்டா(து) ஆகும்
இதுகொணர்ந் தவர்யார் சொற்றிஇது படைத்திடுதி இன்னும்
இதுநயம் எனச்சொற்(று) உண்டாள் யாவர்க்கும் ஊட்டும் செல்வி 41

உண்டுகை பூசி அன்னாள் உதவுபா(கு) அடைவாய் மென்று
கொண்டுமற் றோரும் உண்பான் குலவுபேர் அருள்செ லுத்திக்
கண்டுநேர் மொழியாள் பின்னும் காவலின் அமர்ந்து மேவ
வண்டுவார் குழலாள் நோக்கி இதுவகுத்(து) உரைப்பாள் மாதோ 42

கரும்படி இருத்தல் வேண்டா கதிரவன் காலும் வெப்பம்
அரும்படி வத்து மேவும் அருநிழல் ஆத லால்வேர்
வரும்படி மாற்றும் இந்த மாஅடி இருத்தி என்று
பொரும்படி முயல்கட் பூவைச் சுதன்மைநன்(கு) உரைத்துப் போனாள் 43

மலர்முகம் முறுவல் பூப்ப மாஅடி இருந்து சற்றே
பலர்புகழ் கருணைத் தேவி பாங்கிய ரோடும் பின்னர்
அலர்மதுப் பொய்கைத் தென்பால் ஆகிய வழிபோய் ஆட
மலர்திரி புவனநாதர் மருங்குசென்(று) இறைஞ்சி நின்று 44

கந்தமென் மலர்ச்செய் சென்று காத்ததும் சுதன்மை கொண்டு
வந்தநல் அமுது துய்த்து வந்ததும் பிறவும் கூற
அந்தம்இல் கருணைப் பெம்மான் இளநகை அரும்பி நங்காய்
சந்தமென் பழனம் சென்று காத்தனை தபுதல் இன்றி 45

(தொடரும்...)

## மடாலய நிகழ்வுகள்

24.12.2015 அன்று திருவண்ணாமலை ஈசான்ய ஞான தேசிகர் குருபூசையும், 30.12.2015 அன்று 4ஆவது பட்டம் காரைக்குடி ஸ்ரீமத் ராமசாமி ஞான தேசிகர் குருபூசையும் நடைபெற்றன.

26.12.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் சே. செந்தமிழ்ப் -பாவை, காரைக்கால் அம்மையார் என்னும் தலைப்பில் சிறப்புச் சொற்பொழிவு ஆற்றினார்.

9.1.2016 அன்று மடாலயம் சார்பில் கோலப் போட்டி நடைபெற்றது. மாணவர்கள், ஆசிரியர்கள், பொதுமக்கள் எனப் பலரும்

கலந்து கொண்டனர். தலைமை ஆசிரியை ட.மணிமொழி, மெட்ரிக்குலேசன் பள்ளி முதல்வர் மணிமொழி மோகன் ஆகியோர் போட்டிக்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்.

13.1.2016 அன்று கோவிலூர் மடாலயமும், சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலைக் கல்வி நிறுவனங்களும் இணைந்து மடாலய வளாகத்தின் முன் சமத்துவப் பொங்கல் விழாவைக் கொண்டாடினர். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் அனைவர்க்கும் ஆசி வழங்கினார்கள்.

16.1.2016 அன்று திருவள்ளுவர் திருநாளை முன்னிட்டு மடாலய வளாகத்தில் முற்பகலில் திருக்குறள் முற்றோதலும் பிற்பகலில் பட்டிமன்றமும் நடைபெற்றன.

கோவிலூர் ஆதீனம் அவர்களின் ஆசியுடன் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சி முற்பகலில் நடைபெற்றது. திரு.தெ. சொக்கலிங்கம், திரு. சேவு. முத்துக்குமார், திரு.மெ. ஜெயம்கொண்டான் முதலானோர் பங்கேற்றனர். நூற்றுக்கும் மேற்பட்ட அறிஞர்கள், ஆர்வலர்கள் மாணவர்கள் கலந்து கொண்டனர்.

பிற்பகல் 3.00 மணி அளவில் சிறப்புப் பட்டிமன்றம் நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலை வகித்து ஆசியுரை வழங்கினார்கள். பேராசிரியர் சொ.சொ. மீ. சுந்தரம் நடுவராகப் பொறுப்பேற்றுச் சிறப்பித்தார். திருவள்ளுவரின் கவித்துவம் பெரிதும் வெளிப்படுவது அறத்துப் பாலிலா ? பொருட் பாலிலா? என்னும் தலைப்பில் பட்டிமன்றம் அமைந்தது. அறத்துப்பாலில் தான் என்ற அணியில் முனைவர்.தா.கு. சுப்பிரமணியன், கவிஞர் நீ. இவிச்சந்திரன், முனைவர் எம்.எஸ். கண்மணி ஆகியோரும் பொருட்பாலில்தான் என்ற அணியில் முனைவர் த. இராசாராம், முனைவர் மா. சிதம்பரம், முனைவர் கே. கண்ணாத்தாள் ஆகியோரும் பேசினர். முன்னதாகக் காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். நிறைவாக ம. கார்மேகம் நன்றி கூற நிகழ்ச்சி இனிதே நிறைவேறியது. இறைவணக்கமும் நிறைவு வாழ்த்தும் புலவர் ஆறு. மெய்யாண்டவர் பாடிச் சிறப்பித்தார்.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

சித்தர்கள் உருவ வழிபாட்டிற்கு எதிரான கொள்கை உடையவர்கள். ஒவ்வொருவர் நெஞ்சிலும் ஈசன் இருக்கிறான். அப்படியிருக்க அவனை வெளியிலே தேடுவது வீணானது என்கிறார் சித்தர் சிவவாக்கியர். உலோகங்களாலோ மரங்களாலோ கற்களாலோ இரும்புகளாலோ வேறு வேறு வகையான உருவ பேதங்களை உண்டாக்கி அவற்றைப் போற்றுவதால் எல்லையற்ற பேரானந்தம் கிடைப்பதே இல்லை ஈசன் ஆணையாக இல்லவே இல்லை என்கிறார் சிவவாக்கியர்.

**கல்லுவெள்ளி செம்புஇரும்பு காய்ந்திடும் தராக்களில்**
**வல்லதேவ ரூபபேதம் அங்குஅமைத்துப் போற்றிடில்**
**தொல்லைஅற்று இடம்பெரும் சுகம்தருமோ சொல்லுவீர்**
**இல்லைஇல்லைஇல்லைஇல்லை ஈசன்ஆணைஇல்லையே**

நிறைவாக ஐந்தெழுத்து மந்திரத்தின் ஆற்றல் பற்றிக் கூறுகிறார் சிவவாக்கியர். ஐந்தெழுத்து மந்திரத்தினால்தான் இப்பிரபஞ்சம் தோன்றியது. இறைவனும் ஐந்தெழுத்தில்தான் தோன்றினான். ஐந்தெழுத்தின் ஆற்றலால்தான் அனைத்து உயிர்களும் தோன்றின. உறுதியாக நமக்கு உண்டாகும் மெய்யறிவும் ஐந்தெழுத்தினால்தான். அது குறித்த பாடல் பின்வருமாறு

**இச்சகம் சனித்ததுவும் ஈசனும் ஐந்தெழுத்திலே**
**மெச்சஅம் சராசரங்கள் மேவும்ஐந்து எழுத்திலே**
**உச்சிதப் பல்லுயிர்கள் ஓங்கல்அஞ்சு எழுத்திலே**
**நிச்சயம்மெய்ஞ் ஞானபோதம் நித்தம்ஐந்து எழுத்திலே**

என்று கூறிய சிவவாக்கியர் அந்த அஞ்செழுத்து மந்திரமான சிவாயசிவ என்பதைக் கூறி அதனை உச்சரித்தால் பேரின்பம் கிட்டும். அப்படி ஓதுவதன் மூலம் வானத்தையே ஆளலாம் என்று கீழ்க்கண்ட பாடலால் நிறுவுகின்றார்.

சிவாயசிவ என்னவும் செபிக்கஇச் சகம்எலாம்
சிவாயசிவ என்னவும் செபிக்கயாவும் சித்தியாம்
சிவாயசிவ என்னவும் செபிக்கவானம் ஆளலாம்
சிவாயசிவ என்பதே இருதலைத்தீ ஆகுமே

நாமும் சிவவாக்கியர் சொன்னவற்றைச் சிந்தனை செய்து அஞ்செழுத்து மந்திரத்தைப் புணையாகக் கொண்டு பேரின்ப வாழ்வு பெறுவோம் என்று கூறி இக்கட்டுரையை நிறைவு செய்து அடுத்து அவ்வையார் கூறிய சிந்தனைகளைக் காணலாம்.

அவ்வையார் என்ற பெயரைத் தமிழுலகம் அறியாமல் இருக்கயியலாது. ஆனால் இந்த அவ்வையார் என்ற பெயரில் பல மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன. அதியமானைப் போற்றிப் பாடிய அவ்வையார்; ஆத்திசூடி பாடிய அவ்வையார்; சித்தர் வரிசையிலே ஓர் அவ்வையார். இப்படிப் பல அவ்வையார்களைப் பற்றி வரலாறு பேசுகின்றது.

சித்தர் வரிசையிலே ஒருவராகச் சொல்லப்படும் இந்த அவ்வையாரின் பாடல்கள் வள்ளுவர் பெருமான் இயற்றிய குறள்களைப் போலவே உள்ளன. ஆனால் இவை யோகம் பற்றிய செய்திகளைச் சிறப்பாக எடுத்துச் சொல்கின்றன. மொத்தக் குறள்களின் எண்ணிக்கை 310. அவ்வை குறள் என்னும் இந்தப்பகுதி யோகங்களைப் பற்றிச் சொல்கின்ற பகுதிகளாகவே உள்ளன. எனவே சேரமான் பெருமாள், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகியோர் காலத்தில் வாழ்ந்து விநாயகரைக் குறித்து "விநாயகர் அகவல்" பாடி அனைவருக்கும் முன்னால் வேழமுகத்தவன் அருளால் கயிலையை அடைந்த அவ்வையாக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகின்றது. ஏனெனில் இந்த அகவலில் யோகம் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப் பெறுகின்றன. புலனை அடக்கவும் சிந்தையை இறைவனை நோக்கிச் செலுத்தவும் கற்ற மாந்தர்களே இறவாப் பேரின்பம் எய்துவர். இதற்குத் துணையாக நிற்பது யோகம் என்ற உண்மையைப் பொய் விட்டு மெய் காணும் நெறியைக் காட்டுவதே அவ்வைப் பெருமாட்டியின் நோக்கம். அதனால்தான்




"முத்திக்கு அவ்வையார் சொல்
முந்நூற்றுப் பத்தும் உன்
சித்தத்தில் வைத்துத் தெளி"

என்று கூறினார் போலும்.

அவ்வையார் முதலில் அவையடக்கம் பாடிக் கொள்கின்றார். நல்லவர்கள் பிறர் குற்றத்தைக் காண்பதில்லை.. எது நல்லது என்பதை மட்டும் தேடிக் காணும் இயல்புடையோர். பிறர் குற்றம் காண மாட்டார். அத்தகையர் என் போன்ற சிறியவர்களை இகழ்வரோ? மாட்டார்.

"நல்லோர் பிறர்குற்றம் நாடார் நலந்தெரிந்து
கல்லோர் பிறர் குற்றம் காண்கரோ - அல்லாத
என்போல்வார் என்னை இகழ்வாரோ? என்கவிக்குப்
பின்னை காண்பார் பிழை"

முதலில் வீட்டு நெறிப்பால் என்று தொடங்குகிறது. குறளைப் போலே அதிகாரமும் பத்துப் பத்துப் பாடல்களைக் கொண்டதாக விளங்குகின்றது. வீட்டு நெறிப்பால் என்ற பெருந்தலைப்பின் கீழ் முதலில் பிறப்பின் நிலை கூறப்படுகின்றது. இந்த நெறியைப் பட்டினத்தாரும் பின்பற்றுகிறார். உடற் கூற்று வண்ணம் என்ற தலைப்பில் பிறப்பைத்தான் முதலில் தொடங்குகின்றார். அகரம் எழுத்துக்களின் முதல். அது போலவே இறைவனை உலகிற்கு முதல் என்பார் திருவள்ளுவர். அது போலவே

"ஆதியாய் நின்ற அறிவு முதல் எழுத்து"

என்பார் அவ்வை. பஞ்ச பூதக்கலவையே பிறப்பு. ஐம்பொறிகளால் ஐம்புலப்பயனை நுகர்கின்றது உடம்பு. அதனை

"ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்
ஆசை படுத்தும் அன்று".

என்று கூறுவதோடு இவை ஆசையை உண்டாக்கும் என்பதைக் கூறி இவற்றை விலக்குதல் நலம் என்பதைக் குறிப்பால் கூறுகிறார். துறவற இயலில் இதனை வள்ளுவர் பெருமான் கூறுங்காலை

சுவைஒளி ஊ(று) ஓசை நாற்றமென்று ஐந்தின்
"வகைதெரிவான் கட்டே உலகு"

என்று கூறுகிறார். ஐம்புலன்களைப் புறத்தே செலவிடாமல் இருப்பவனே துறவி என்பதை வலியுறுத்துகின்றார். அவ்வையும் சித்தனுக்கு இவையனைத்தும் தேவை என்று கூறுகிறார்.

"தர்மார்த்த காம மோட்சம்" என்பன மாந்தர்க்குத் தேவை என்று ஞானியர் கூறுவர்.

உலகிலுள்ள அனைத்து அற நூல்களும் இவற்றைப் பேசுகின்றன. இவற்றைப் பிறநூல்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்று பேசும். அவ்வையின் குறளும் இவற்றை வற்புறுத்துகின்றது.

"தருமம் பொருள்காமம் வீடெனும் நான்கும்
உருவத்தால் ஆய பயன்"

நாம் உடலெடுத்ததன் பயன் உள்ளவற்றைக் கடைப்பிடிப்பதற்கே என்பது அவ்வையின் வாக்கு. இவை தவிர பர்வ மூர்த்தம் ஐந்து சக்தி ஆறு என்று சொன்னவர் உடலுக்குரிய ஏழினைக் குறிப்பிடுகின்றார்.. புண் நீர் அங்கி மதி காற்று இரவி விண் எச்சம் மூர்த்தி என்பவை எட்டு எனக் கூறுகிறார். உடம்பிற்கு உண்டானவை இவை என்றபின் அடுத்த அதிகாரம் உடம்பினால் உண்டாகும் பயனைக் கூறுகின்றது. உடம்பு பெற்றதன் பயன் காணவே என்றவர் உயர்தலே உடம்பின் பயன் உணர்வுடையரே அதனை உணர்வர். உடம்பு பெற்ற ஒரு பயன் என்னவெனில் சங்கரனாகிய சிவனைச் சார்தலே ஆகும். துறவு பூண்டு தூய நெறிவழிச் செலுதலே பிறப்பினால் வந்த பயன். தூய நெறிவழிச் செல்லும் உடலுடையவர்க்கே உணர்வு உண்டு. அதாவது உடலிருந்தால்தான் உணர்வு உண்டாம். குற்றம் இல்லாத நெறியாளர்க்கே உடம்பு கடவுளைக் காட்டும். நிறைவாக ஈசனைத் தேடலே என்று உடம்பின் பயன் என்ற அதிகாரம் கூறுகின்றது.

*(தொடரும்....)*

## தமிழ்த்தூண் சாய்ந்தது

டாக்டர்.சே.குமரப்பன், கல்வி ஆலோசகர் மற்றும் மக்கள் தொடர்பு அலுவலர், கோவிலூர் மடாலயம்

### தமிழுக்கும் நகரத்தார்க்கும் பெருமை சேர்த்த டாக்டர் தமிழண்ணல் மறைவிற்கு அஞ்சலி

இராம. பெரியகருப்பன் எனும் டாக்டர் தமிழண்ணல் 12.8.1928ல் முத்துராமன் செட்டியார் - பார்வதி ஆச்சியின் மகனாகப் பிறந்தார். பின்னர் இராமசாமி செட்டியார் - கல்யாணி ஆச்சி வீட்டிற்குப் பிள்ளை வளரச் சென்றார். நெற்குப்பையைச் சார்ந்த இவர் மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியிலும், திருவையாறு அரசர் கல்லூரியிலும் தமிழ் பயின்று வித்துவான் பட்டம் பெற்றார். காரைக்குடி எஸ்.எம்.எஸ். உயர்நிலைப் பள்ளியில் 1948 முதல் 13 ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றினார். கவிஞர் முடியரசனும் இவருடன் பணியாற்றினார் என்பது குறிப்பிடத்தக்கது. பின்னர் தனியாகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பயின்று தமிழில் பி.ஏ. மற்றும் எம்.ஏ. பட்டங்களைப் பெற்றார். பின்னர் 1961 முதல் 10ஆண்டுகள் மதுரை தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். முன்னாள் அமைச்சர்கள் தமிழ்க்குடிமகன், காளிமுத்து பேரா. அப்துல்காதர் போன்றோர் இவரிடம் தியாகராசர் கல்லூரியில் தமிழ் பயின்றவர்களாவர். இங்கு பணிபுரிந்தபொழுது 'சங்க இலக்கிய மரபுகள்' எனும் தலைப்பில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றார். முனைவர் சி. இலக்குவனாரும், முனைவர் அ. சிதம்பரநாதனாரும் இவரது ஆய்வு நெறியாளர்கள் ஆவர்.

1971ல் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் விரிவுரையாளராகச் சேர்ந்து இணைப்பேராசிரியர், பேராசிரியர், எனப் படிப்படியாக உயர்ந்து இறுதியாகப் புல ஒருங்கிணைப்பாளராகப் பணியாற்றி 1989ல் ஓய்வு பெற்றார். பின்னர் இரண்டு ஆண்டுகள் பல்கலைக்கழக மானியக்குழு வழங்கிய சிறப்பு நிலைப்பேராசிரியராகப் பணியாற்றினார்.

சங்க இலக்கியம், ஒப்பிலக்கியம், ஆராய்ச்சி, இலக்கியத்திறனாய்வு, இலக்கணம், இலக்கிய வரலாறு, மொழியியல், கவிதை, புதினம் என 80க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார்.

**சொல்புதிது சுவைபுதிது**
**தமிழில் அடிக்கடிநேரும் பிழைகளும் திருத்தமும்**
**தமிழுக்கு ஆகமங்கள் தடையாகுமா?**
**பேசுவதுபோல் எழுதலாமா?**
**பேச்சுத்தமிழை இகழலாமா?**
**பிழைதிருத்தும் மனப்பழக்கம்**
**உரைவிளக்கு**
**தமிழ்உயிருள்ள மொழி**
**தமிழ்கற்பிக்கும் நெறிமுறைகள்**
**தமிழ்த்தவம்**
**உங்கள் தமிழைத் தெரிந்துகொள்ளுங்கள்**
**திருக்குறள் உரை**
**புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு**
**இனிய தமிழ்மொழியின் இயல்புகள்**
**காதல் வாழ்வு,**
**பிறைதொழும் பெண்கள்,**
**தாலாட்டு**
**சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக்கொள்கைகள்**
**சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள்**
**தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்**
**ஒப்பிலக்கிய அறிமுகம்**
**குறிஞ்சிப்பாட்டில் திறனாய்வு விளக்கம்**

தமிழில் ஆய்வு, ஆய்வியல் அறிமுகம் ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கன.

சைவசித்தாந்தங்களை அடிப்படையாகக் கொண்டு செட்டிநாட்டு வாழ்க்கை முறையைச் சித்தரிக்கும் 'நச்சுவளையம்', 'வாழ்வரசி' ஆகிய புனைகதைகள் பெரும் வரவேற்பைப்பெற்றன.

தொல்காப்பியம், நன்னூல், அகப்பொருள் விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம் ஆகிய நூல்களுக்கு உரை எழுதி உள்ளார்.

1981 - 82ஆம் ஆண்டில் பல்கலைக்கழக மானியக்குழு இவரைத் தேசியப் பேராசிரியராக நியமனம் செய்தது. அக்கால கட்டத்தில் இந்தியப் பல்கலைக்கழகங்கள் பலவற்றிற்குச் சென்று தமிழ் இலக்கியம் மற்றும் தமிழ்மொழி பற்றிச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளார்.

நூற்றுக்கும் மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகளை எழுதியுள்ளார். 1983ம் ஆண்டில் இலங்கையில் நடைபெற்ற உலக இந்துசமயக் கருத்தரங்கிலும் அதே ஆண்டு ஜப்பான் தலைநகர் டோக்கியோவில் நடைபெற்ற அனைத்துலக மானுட அறிவியல் கழக மாநாட்டிலும் ஆய்வுக்கட்டுரை சமர்ப்பித்துள்ளார். இலங்கை, அமெரிக்க நாடுகளிலும் கருத்தரங்குகளில் ஆய்வுக்கட்டுரை வழங்கியுள்ளார். இவரது வழிகாட்டுதலில் 40க்கும் மேற்பட்டோர் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்.

முன்னாள் முதல்வர் மு. கருணாநிதி எழுதிய “தொல்காப்பியப் பூங்கா” எனும் நூலின் முதல் மற்றும் இரண்டாம் பதிப்புகள் டாக்டர். தமிழண்ணல் தலைமையில் வெளியிடப்பெற்றன.

இவர் சிறந்த கவிஞர். இவர் எழுதிய “மாமதுரை மீனாட்சி ”என்ற 101 வரிப்பாடலுக்கு 1973ஆம் ஆண்டு தமிழக அரசின் பொற்கிழிப் பரிசு வழங்கப்பெற்றது. நூற்றுக்கணக்கான கவியரங்குகளில் பங்குபெற்றுள்ளார். 1989ஆம் ஆண்டு தமிழக அரசின் “திரு.வி.க.”மற்றும் “கலைமாமணி” விருதுகள் இவருக்கு வழங்கப்பெற்றன. மத்திய அரசின் “செம்மொழி விருது” டில்லியில் குடியரசுத் தலைவரால் வழங்கப்பெற்றது. 2013ஆம் ஆண்டு எஸ்.ஆர்.எம். பல்கலைக்கழகம் சிறந்த தமிழ் அறிஞருக்கான “பாரிவேந்தர் பைந்தமிழ் விருதி” னை வழங்கிப் பெருமைப்படுத்தியது. 1971ஆம் ஆண்டு குடியரசு தினத்தன்று புதுடில்லியில் அகில இந்திய வானொலி நடத்திய கவியரங்கில் இவர்

வாசித்த 'செல்வம்' எனும் கவிதை அனைத்து மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பெற்றது.

1985 முதல் ஞானபீட விருதுக்குரிய கருத்துரைஞர் குழு உறுப்பினராகவும், சாகித்திய அகாதமியின் பொதுக்குழு உறுப்பினராகவும், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், வெங்கடேசுவரா பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், கோழிக்கோடு பல்கலைக்கழகம் ஆகியவற்றின் பாடத்திட்டக்குழு உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார். தமிழகப் புலவர் குழு உறுப்பினராகவும், தமிழக அரசின் குறள் பீடத்தின் தலைவராகவும் இருந்துள்ளார். சிங்கப்பூரில் தமிழ்ப்பாடநூல்கள் உருவாக்குவதற்கான ஆலோசனைக் குழுவில் இடம் பெற்றுப் பாடநூல்களை உருவாக்கும் பணியைச் சிறப்பாகச் செய்து முடித்தார். இவர் பயின்ற மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியின் நிர்வாகக் குழுத் தலைவராகத் திறம்படப் பணியாற்றினார்.

தினமணி நாளிதழில் எண்ணற்ற கட்டுரைகள் எழுதியுள்ளார். தினமணி ஆசிரியர்கள் பலருடன் நெருக்கமாக உறவு கொண்டு தினமணி நாளிதழ் நடத்திய பல்வேறு விழாக்களில் பங்கு பெற்றுள்ளார். இவர் தினமணி நாளிதழில் எழுதிய "உங்கள் தமிழைத் தெரிந்துகொள்ளுங்கள்" எனும் தொடர் பெரும்வரவேற்பைப் பெற்றதோடு புகழையும் தேடித்தந்தது.

1988ல் 101 தமிழ் அறிஞர்களுடன் தமிழைக்கட்டாயப் பயிற்றுமொழி ஆக்கக்கோரி நடைபெற்ற சாகும்வரை உண்ணாவிரதப் போராட்டத்தைத் தலைமை தாங்கி நடத்தினார். சங்க இலக்கியங்களில் நகரத்தார்கள் பற்றிய தொடர்புகள் குறித்துப் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி நகரத்தார் இதழ்களில் வெளிவந்துள்ளன.

தமிழண்ணல் அவர்களுக்கு 1954ஆம் ஆண்டு திருமணம் நடைபெற்றது. இவரது மனைவி தெய்வானை; இவருக்கு சோலையப்பன், கண்ணன், மணிவண்ணன் என்ற ஆண் மக்களும், கண்ணம்மை, அன்புச்செல்வி, முத்துமீனாள் என்ற பெண் மக்களும் உள்ளனர்.

தமிழண்ணல் அவர்கள் கோவிலூர் மடாலயத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்.

05.05.2002 அன்று கோவிலூரில் நடைபெற்ற தொண்ணூற்றாறு ஊர் நகரத்தார்கள் கூடிய எழுச்சி மாநாட்டில் டாக்டர் தமிழண்ணல் அவர்களுக்கு நகரத்தார் ரத்தினம் என்ற பட்டமும் தங்கப்பதக்கமும் வழங்கிப் பாராட்டப்பெற்றார். இம்மாநாட்டில் இவர் உரையாற்றினார்.

1998ஆம் ஆண்டு கோவிலூரில் நடைபெற்ற சிலப்பதிகார விழாவில் கருத்தரங்கத்திற்குத் தலைமை தாங்கினார்.

கோவிலூர் மடாலயம் சார்பில் சென்னையில் 2000ஆம் ஆண்டு டிசம்பர் 1,2,3 தேதிகளில் நடைபெற்ற திருக்குறள் மாநாட்டில் 2ஆம் நாள் நடைபெற்ற அரசியல் அரங்கத்தில் பேசிய டாக்டர் தமிழண்ணல் திருக்குறளின் பெயரால் ஒன்றுபடுங்கள் எனப்பேசினார். இம்மாநாட்டில் இவருடன் நாச்சியப்ப சுவாமிகள், குமரி அனந்தன், நாஞ்சில் சம்பத், பழ. பழனியப்பன், வலம்புரிஜான், சுப.வீரபாண்டியன், பழ. நெடுமாறன், தா.பாண்டியன், பேரா.பா. நமச்சிவாயம், பேரா. அப்துல்காதர் ஆகியோர் பங்கு பெற்றனர்.

நாச்சியப்ப சுவாமிகள் தமிழில் உள்ள பல செவ்வியல் இலக்கியங்கள் சாதாரண மக்களைச் சென்றடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் தொன்மைமிக்க சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களை எளிய மக்களும் புரிந்துகொள்ளும் வகையில் மக்கள் பதிப்பாக வெளியிட எண்ணித் தமிழண்ணல், சுப. அண்ணாமலை ஆகிய இருவரையும் பொதுப்பதிப்பாசிரியர்களாகக் கொண்டு பத்துப்பேராசிரியர்களால் 11 தனி நூல்கள் தயாரிக்கப்பெற்றன.

இந்த மக்கள் பதிப்பை டெல்லியில் உள்ள குடியரசுத் தலைவர் மாளிகையில் மாண்புமிகு அப்துல்கலாம் அவர்கள் 2006ஆம் ஆண்டு வெளியிட்டார். இந்த விழாவில் தமிழண்ணல் சுப. அண்ணாமலை ஆகியோர் கலந்து கொண்டனர். இவர்களுடன் இந்நூல்களுக்கு

விளக்கம் எழுதிய சிங்காரவேலன், கதிர்மகாதேவன், தெ. முருகசாமி, இரா. இளங்குமரன், இரா. சாரங்கபாணி, ச.வே. சுப்பிரமணியன் ஆகியோரும் பங்கேற்றனர்.

2009ஆம் ஆண்டு டிசம்பர் 26, 27, 28 ஆகிய தேதிகளில் கோவிலூர் மடாலயமும் மத்திய செம்மொழி ஆய்வு நிறுவனமும் இணைந்து கோவிலூரில் நடத்திய தொல்காப்பியர் காலக்கருத்தரங்கில் கலந்து கொண்டு உரையாற்றினார். இக்கருத்தரங்கில் தீர்மானங்களை வாசித்தார்.

30.01.2014 அன்று கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்ற குறள் விழாக்கவியரங்கத்தைத் தமிழண்ணல் அவர்கள் தலைமையேற்று நடத்தினார்.

அண்மையில் 21.9.2015 அன்று கோவிலூரில் நடந்த நாச்சியப்ப சுவாமிகள் 4ஆவது குருபூஜை விழாவில் கலந்து கொண்டு பேசினார். குழந்தைக் கவிஞர் செல்லகணபதிக்குச் சாகித்ய அகாடமி விருது பெற்றமைக்காகப் பாராட்டினையும் வழங்கினார். மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற இவ்விழாவில் ஊரன் அடிகளுடன் பங்குபெற்றார். உடல்நிலை சரியில்லாத போதும் நடக்க இயலாமல் இருந்த நிலையிலும் கோவிலூர் மடாலயத்தின் பால் கொண்டிருந்த நன்மதிப்பின் காரணமாக நாற்காலியில் அழைத்துவரச் செய்து விழாவில் பங்குப்பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது. இதுவே அவர் கோவிலூர் மடாலயத்தில் பங்கு கொண்ட இறுதி நிகழ்ச்சியாகும்.

டாக்டர் தமிழண்ணல் அவர்கள் 88ஆம் வயதில் 29.12.2015 அன்று இயற்கை எய்தினார். அவரது இழப்பு நகரத்தாருக்கு மட்டுமல்ல; தமிழ் உலகுக்கே மாபெரும் இழப்பு; தமிழண்ணலை இழந்து வாடும் குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள். காலப்பெட்டகத்தில் தமிழண்ணலின் வரலாற்றைப்பதிவு செய்வதும். அவரது அவாவான தமிழ்மொழியைப் பாதுகாக்க நாம் முயல்வதுமே நாம் அவருக்குச் செலுத்தும் அஞ்சலியாகும்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**




# திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில்

1984 இல் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்ற வேளையில் உருவான தமிழ்ச்சுரங்கம் பேராசிரியர் முனைவர் ஆறு. அழகப்பன் அவர்களைத் தலைவராகக் கொண்டு அருந்தமிழ்ப் பணிகளைச் செய்து வருகிறது. தமிழன் என்ற உணர்வுகளைப் பெற, சில குறியீடுகளை ஒருபணியாகக் கொண்டுள்ளது. அவ்வகையில் உலகத்தமிழர் உவப்ப, தமிழ்த்தாய் உருவம் உருவாக்கிப் பரப்பும் பணியில் தொடர்ந்து ஈடுபட்டு வருகிறது. தமிழ் உணர்வு மங்காமல் இருக்க, தமிழ்த்தாய், திருவுருவத்தை, திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில் உருவாக்கி வீற்றிருக்கச் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளது. முயற்சி திருவினையாக்கிட அருள்மிகு அண்ணாமலையார் அருள் பாலிப்பாராக.

**தமிழ்ச்சுரங்கம்**
சென்னை - 92